

## பகவத் பாதை தமிழ் மாத இதழ்

"எதிர்காலம் என்பது இல்லாத ஒன்று. இனி தான் அது ஏற்பட வேண்டும். அங்கு பிரச்சினையும் ஏற்படலாம், பிரச்சினை ஏற்படாமலும் இருக்கலாம். இதுதான் நடைமுறை உண்மை.

நமது புத்தி பிரச்சினை ஏற்பட்டுவிடும் என்று முடிவு எடுக்குமேயானால் பதற்றமும் பயமும் ஏற்பட்டுவிடும்.

நடைமுறையில் உண்மையற்ற ஒன்றுதான் எதிர்மறைச் சிந்தனையாக இருந்து நம்மை பயமுறுத்துகிறது.

உண்மையைவிட பொய்மைதான் இங்கு பிரச்சினையாக உள்ளது. இப்போது உண்மையை எதிர்கொள்வதை விட பொய்மையைத் தான் எதிர்கொள்ள வேண்டியுள்ளது.

– ஸ்ரீ பகவத்

## சென்னையில் ஸ்ரீ பகவத் மிஷன் நடத்தும்
# ஒரு நாள் ஞான முகாம்

நாள் : 15.12.2019 ஞாயிற்றுக்கிழமை நேரம் : 9:30am to 6:00pm

இடம் : Acupuncture Home, 120/956, Poonamallee High Road, Opp to Sudha Udupi Hotel, (Dasaprakash Bus stop) Purasaivakkam, Chennai.



நிகழ்ச்சி மற்றும் உணவுக்கான செலவுப் பகிர்வு ரூ. 300/- ஒருவருக்கு.

தேடுதல் உள்ள நண்பர்களுடனும் உறவினர்களுடனும் கலந்து கொண்டு பயனடைய வேண்டுகிறோம்.

விபரங்களுக்கு

ஆனந்த் - 9884348800 முத்துலட்சுமி - 8838229095
ஜான்சி - 9600029023 ரவிச்சந்திரன் - 9444402986

## கோடையில் இயற்கை சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 4 நாள்
# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

**தலைப்புகள் :** 1. ஞானப்புரிதல் 2. அகம்-புறம் 3. நான் யார்? 4. நினைவும் சிந்தித்தலும் 5. மனோலயம் - மனோ நாசம் 6. கர்மவினை 7. தெளிவில் உறுதி

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : 30-4-2020 வியாழக்கிழமை மாலை 4 மணி முதல் 3-5-2020 ஞாயிறு மாலை 3.00 மணி வரை

- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு **ரூ. 5000/-** மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் மார்ச் 31ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

**முன்பதிவு செய்யும் வழிகள் :**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC : HDFC 0001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
கைப்பேசி : **9994205880, 97891 65555**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075

# புரிந்த பிறகும் பிரச்சினையா ? (பகுதி – 2)





- ஸ்ரீ பகவத்

அலையில்லாத கடல் கிடையாது.

வாழ்க்கை என்றால் ஏதாவது ஒரு பிரச்சினை இருந்து கொண்டுதான் இருக்கும்.

ஒருவர் ஞானம் அடைந்து விட்டால் அவருக்கு எந்தப் பிரச்சினையும் ஏற்படாதா?

நாம் குறிப்பிடும் ஞானம் என்றால் என்ன?

ஒரு அகன்ற பாத்திரத்தில் தண்ணீர் நிறைந்திருக்கிறது. அதன் மேற்பரப்பில் விரல்களால் தொடுகிறோம். நமது விரல் பட்ட இடத்தில் அதனைச் சுற்றி வட்டமான அலை ஒன்று உருவாகிறது.

அந்த அலையைச் சமன்செய்ய நாம் என்ன செய்ய வேண்டும்? நமது கைகளால் அந்த அலையைத் தொட்டு சமன் செய்ய வேண்டுமா?

அப்படித் தொட்டு சமன்படுத்துவோமானால் மீண்டும் மீண்டும் புதிய அலைகளே உருவாகி விடும்.

ஆனால் அப்படி எதுவுமே செய்யாமல் அந்த அலையை அதன் போக்கிலேயே விட்டு விட்டால் அந்த அலை தானாகவே சமன் பட்டு விடும்.

இதுபோல் ஒரு பிரச்சினையான சூழ்நிலையில் அதன் தாக்கமானது நம் மனதில் நாம் விரும்பாத ஏதாவது ஓர் உணர்ச்சி அலையை உருவாக்கிவிடலாம்.

அந்த அலையை இயற்கையானது என்று முடிவு செய்து அதன் போக்கிலேயே விட்டு விட்டால் போதும். அதனை சீரமைக்க எந்த முயற்சியையும் எடுத்திடத் தேவையில்லை.

அப்படி முயலத் தேவையில்லை; அதனை அதன் போக்கில் விட்டுவிட்டால் போதும்

–என்ற முடிவுக்கு வருவதை ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

அந்த நிலையில் நமக்கு ஏற்படும் நல்ல மற்றும் விரும்பாத உணர்ச்சிகள் யாவும் தாமாகவே மறைந்து விடுபட்டு விடுகின்றன.

இதனை நாம் விடுதலை அல்லது முக்தி என்று குறிப்பிடுகிறோம்.

இதை நாம் அனைவரும் புரிந்து கொண்டு விட்டோம். அது சரியாகச் செயல்படுவதையும் ஆய்வு செய்து பார்த்து விட்டோம்.

இது போகவும் வேறு என்ன பிரச்சனை உள்ளது?

நாம் பார்த்த அதே உதாரணத்தை வேறு விதமாக மாற்றிக் கொள்வோம்.

நீர்க் குட்டை (தடாகம்) ஒன்றில் நீர் தேங்கியுள்ளது. அந்த நீர் அசைவற்று அமைதியாக உள்ளது. அந்த நீர்த் தேக்கத்தை ஒட்டி மரம் ஒன்று காய்களுடனும் பழத்துடனும் உள்ளது.

மரத்திலிருந்த பழம் ஒன்று அந்த நீரின் மீது விழுகின்றது. பழம் விழுந்த இடத்தில் நீரில் பள்ளம் ஒன்று ஏற்படுகிறது. அதைச் சுற்றிலும் வட்டமாக அலையும் உருவாகிறது.

சில கணங்களில் அந்த பள்ளமும் மறைந்து விடுகிறது; அலையும் மறைந்து விடுகிறது. அந்தப் பள்ளத்தையும் அலையையும் சமன்படுத்த அந்தத் தடாகம் எந்த முயற்சியையும் செய்யவில்லை. ஆனால் அவையாவும் தாமாகவே சமன் பட்டுவிட்டன.

ஆனால் சற்று நேரத்தில் இன்னுமொரு பழம் நீரில் விழுந்து மீண்டும் ஒரு பள்ளத்தையும் அலையையும் உருவாக்கிவிடுகிறது.

மீண்டும் அந்த பள்ளமும் அலையும் சமன் பட்டு விடுகின்றன.

தடாகம் எந்த முயற்சியிலும் ஈடுபடுவதில்லை. அதனால் எந்தப் பள்ளமோ அலையோ புதுப்பிக்கப்படுவதில்லை.

ஆனாலும்கூட அந்த மரத்திலிருந்து புதிதுபுதிதாக பழங்களோ பிஞ்சுகளோ உதிர்வதாகவும் அவைகள் புதிது புதிதாகப் பள்ளத்தையும் அலைகளையும் உருவாக்கி கொண்டிருப்பதாகவும் இருகின்றன.

இதுபோல் நாம் ஏதாவது ஒரு பிரச்சினையை நாம் நமது வாழ்வில் சந்திக்கும் போது அது நம் மனதில் சங்கடமான ஓர் அலையை உருவாக்கி விடுகின்றது.

நாம் தெளிவடைந்து விட்ட காரணத்தால் நாம் நமக்கு ஏற்பட்ட அலையைச் சீரமைக்க எந்த முயற்சியிலும் ஈடுபடுவதில்லை. அதனால் தாமாக ஏற்பட்ட அந்த அலையானது தாமாகவே மறைந்து விடுகிறது.

சில பிரச்சினைகள் தொடர் பிரச்சினையாக இருக்கலாம். அதனால் அந்தப் பிரச்சினை தொடர்ச்சியாகக் கூட அலைகளை உருவாக்கி கொண்டிருக்கலாம்.

ஏற்பட்ட அலையைக் குறித்து நாம் எதனையும் செய்யத் தேவையில்லை.

ஆனால் புதிதாக அலைகளே ஏற்படாதவாறு

நாம் பார்த்துக் கொள்வது எவ்வாறு?

அலைகள் ஏற்படுவது நமது அகத்தில் தான் என்றாலும் அதற்கு காரணம் புறமே ஆகும்.

புறத்தை ஒழுங்குபடுத்துவதன் மூலமே நாம் புதிய அலைகள் உருவாகாமல் பார்த்துக் கொள்ள முடியும்.

அகத்தை நாம் ஒழுங்கு படுத்த தேவையில்லை என்பதுதான் ஞானம்.

அதுதான் ஞானப் புரிதல்.

நம்முடைய மன அம்சத்தை ஒழுங்குபடுத்தத் தேவையில்லை என்பதுதான் நமது ஞானப் புரிதல்.

பிரச்சினையினால் ஏற்பட்ட நமது மன வேதனைதான் நமது மன அம்சமாக உள்ளது.

அதனை இயற்கை என எடுத்துக் கொள்வதுதான் அதற்கான தீர்வு.

ஆனால் புறப் பிரச்சினையை எப்படி நாம் அணுகுவது?

பழங்களும் பிஞ்சுகளும் புதிது புதிதாக தண்ணீரில் விழுந்து அலைகளை ஏற்படுத்துவதை எவ்வாறு எதிர்கொள்வது?

அமெரிக்காவில் வசிக்கும் தமிழ்நாட்டைச் சேர்ந்த பெண் ஒருவர் கேள்வி ஒன்றை அனுப்பிவைத்திருந்தார்.

அக உணர்ச்சிகளை எதிர்கொள்வது சம்பந்தமான–அகம் சம்பந்தமான உங்களுடைய அணுகுமுறை பயனுடையதாக உள்ளது. ஆனால் புறச் செயல்களில் வெற்றி பெறுவது சம்பந்தமாக நீங்கள் அதிகம் பேசவில்லை. அகத்தில் இலட்சியங்களுடனும் தன்னம்பிக்கையுடனும் இருந்தால்தான் புறத்தில் வெற்றி பெறமுடியும் என்று பலரும் கூறி வருகிறார்கள். அகத்தை வடிவமைக்குமாறு கூறுகிறார்கள். புறச்செயலின் வெற்றிக்கு நாங்கள் உங்களது அணுகுமுறையின் படி என்ன செய்ய வேண்டும்?

–இவ்வாறு அவர் கேட்டிருந்தார்.

இப்போது அகம் சம்பந்தமான கேள்வியை விட புறத்தை எவ்வாறு அணுகுவது என்பதுதான் முக்கியத்துவம் பெற்ற ஒன்றாக இருக்கிறது.

புறத்தை நாம் எவ்வாறு எதிர்கொள்வது?
நாம் மேடையில் ஏறிப் பேச வேண்டியது உள்ளது. மைக்கை பிடித்ததும் நமக்கு நடுக்கம் ஏற்படுகிறது.

இங்கு அக அம்சம் என்பது எது? புற அம்சம் என்பது எது?

மேடையில் நான் பேசுவது புற அம்சம் அல்லது செயல் அம்சம்.

மேடையில் ஏறியதும் நடுக்கம் ஏற்படுவது விளைவு அம்சம் அல்லது அக அம்சம்.

நாம் காரை ஓட்டுகிறோம். இது செயல் அம்சம். கார் ஆக்ஸிடன்ட் ஆகி விடுமோ என்ற பயம் ஏற்படுகிறது. இது விளைவு அம்சம் அல்லது அக அம்சம்.

மேடையேற பயப்பட்ட அவர் மேடை ஏற மறுத்துவிடுகிறார்.

காரை ஓட்ட பயப்பட்ட அவர் காரை ஓட்ட மறுத்துவிடுகிறார்.

இதனால் செயல்படவேண்டிய செயலில் தடங்கல் ஏற்பட்டு விடுகிறது.

இப்போது நமது அணுகுமுறை என்ன?

நமது கவனம் செயலில் இருக்க வேண்டுமே தவிர விளைவாக ஏற்படும் பயத்தில் இருக்கக் கூடாது.

இவ்வாறு நாம் செயல்படுவோமேயானால் ஏதோ ஒரு வகையில் நாம் செயலுக்கு வந்து விடுவோம். செயல்கள் முடங்கிப் போகாது.

ஆனாலும் கூட நாம் நமது செயல்களில் நாம் எதிர்பார்க்காத சூழ்நிலைகளைச் சந்திக்கும்போதெல்லாம் நமக்கு மன பாதிப்புகளும் ஏற்படவே செய்யும்.

எப்போதெல்லாம் நம் மனம் பாதிக்கப்படுகிறதோ அப்போதெல்லாம் "நமது அணுகுமுறை சரிதானா?" என்ற கேள்வியும் நமக்குள் எழத்தான் செய்யும்.

நாம் சந்திக்கும் சூழ்நிலைகள் அனைத்தும் புதிது புதிதானவை. அவை பல்வேறு அம்சங்களில் உள்ளதால் அவற்றை நூறு சதவீதம் சரியாக கணிக்க முடியாது. சூழ்நிலைகள் பெரும்பாலும் அவை நம்மை மீறியவை;நமது கட்டுப்பாடு இல்லாதவை.

ஆகவே நம்முடைய எல்லா செயல்களிலும் ஒருவித நிச்சயமற்ற தன்மையும் இருந்து வருகிறது.

நாம் வாகனத்தை கவனமாக ஓட்டி வந்தாலும், எதிரில் வருபவர்கள் அனைவரும் வாகனத்தை நம்மைப்போலவே ஓட்டி வருவார்கள் என கூறமுடியாது.

சூழ்நிலைகள் அனைத்தும் நிச்சயமற்ற தன்மையில்தான் உள்ளன. அது தான் இயற்கை.

டிரைவிங் செய்யும்போது நமக்கு பயம் ஏற்படுகிறது.

இப்போது நாம் பயத்தின் மீது கவனம் செலுத்தாமல் டிரைவிங் மீது மட்டுமே கவனம் செலுத்த வேண்டும்.

–இதுதான் நமது அணுகுமுறை.

டிரைவிங் மீது மட்டும் கவனம் செலுத்துவது எவ்வாறு?

பயமெனும் விளைவு என்பது அகம் ஆகும்.

டிரைவிங் என்னும் செயல் புறம் ஆகும்.

அகத்தைச் சீர் அமைக்க எந்த முயற்சியும் செய்யாமல் புறச் செயலில் மட்டுமே கவனத்தைச் செலுத்துவது எவ்வாறு?

அகத்தை A என்றும், புறத்தை B என்றும் நாம் கூறிக் கொள்ளலாம். அகம் என்னும் Aயில் நமக்கு எந்த வேலையும் இல்லை. புறம் என்னும் Bயில் தான் நமக்கு வேலை உள்ளது.

இந்த B–யை அணுகுவது எவ்வாறு?

இந்த Bயும் B1 மற்றும் B2 என இரு பிரிவாக உள்ளன.

இதிலும் B1 என்பது நமது மன அம்சமாகவும், B2 என்பது செயல் அம்சமாகவும் உள்ளது.

A என்பதும் B1 என்பதும் மன அம்சங்களாகும்.

B என்பதும் B-2 என்பதும் செயல் அம்சங்களாகும்.

மன அம்சத்தில் நமக்கு வேலை கிடையாது என்பதையும் செயல் அம்சத்தில் மட்டுமே நமக்கு வேலை உண்டு என்பதையுமே நாம் நமது அணுகுமுறையாக கொண்டுள்ளோம்.

B மற்றும் B2 என்னும் செயல் அம்சங்களில் நமக்கு 100 சதவீதம் வேலை உள்ளது.

அதுபோல் A மற்றும் B-1லும் நமக்கு 100% வேலைகள் கிடையாதா?

B என்பது செயல் அம்சம். அதில் B-1 மற்றும் B-2 என்பவை எவற்றைக் குறிக்கின்றன?

நாம் எந்த செயலைச் செய்தோமானாலும் மனதின் உதவியோடு தான் செய்திட முடியும்.

நம்முடைய செயல்களை நிர்வாகம் செய்யும் மனோ அம்சம்தான் B-1 ஆகும்.

B-1ம் B-2வும் ஒருங்கிணைந்து செயல்பட்டால்தான் B என்னும் புறச் செயல் செம்மையாக நடக்கும்.

இதன் மூலம் A எனும் அக உணர்ச்சிகளில் தேவையற்ற தன்மை வெளிப்படாது.

செயலை நிர்வகிக்கும் மன அம்சம் எப்படிச் செயல்படுகிறது? அது எப்படிச் செயல்பட வேண்டும்?

நேற்று காரை எடுத்துக் கொண்டு போகும்போது பைக் ஒன்றை மோதித் தள்ளி விட்டோம்.

இன்று காரை ஸ்டார்ட் செய்த உடனேயே நேற்று நடந்த விபத்து தான் நினைவுக்கு வருகிறது.

இது இயற்கைதான். இப்படி ஒரு எண்ணம் ஏற்பட்ட காரணத்தினால் நாம் விபத்திற்கான காரணிகளை எவ்வாறு ஒதுக்குவது என சிந்தித்து அதனை நாம் பின்பற்ற தயாராகிறோம்.

உடன் நாம் செயல்பட தயாராக இருந்த போதிலும் "விபத்து ஏற்பட்டு விடுமோ? ஏற்பட்டு விடுமோ?" என்று எண்ணம் மீண்டும் மீண்டும் நம்மிடம் எழுந்து ஒரு பயம் மற்றும் பதட்ட உணர்வை ஏற்படுத்துகின்றது.

இந்தப் பதட்ட உணர்வுக்குக் காரணம் என்ன?

B-1 ன் செயல்பாடு தான் காரணம். நமது புற செயல்களோடு தொடர்புடைய மன அம்சம் தான் காரணமாகும்.

A எனும் அக அம்சத்தை நாம் இயற்கை என எடுத்துக் கொண்டோம்.

A சம்பந்தமாக நாம் எதுவும் செய்யத் தேவையில்லை என்பதையும் Aயைச் சீரமைக்க தேவையில்லை என்பதையும் நாம் தெளிவாகப் புரிந்து கொண்டு விட்டோம்.

அதுபோல் B-1 என்ற அம்சத்தையும் இயற்கை என எடுத்துக்கொள்ள வேண்டுமா?

B-1 என்பது அக–மன அம்சமாக இருந்தாலும் அது முழுமையாக இயற்கையானது அன்று. செயற்கையும் கலந்த ஒன்றுதான் அது.

ஆகவே செயல்களோடு சம்பந்தப்பட்ட மன அம்சத்திற்கு நாம் பொறுப்பு எடுத்துக் கொள்வதுதான் சரி. B-1ஐ சீரமைக்க வேண்டியது நமது கடமை.

B-1 எப்படி செயல்படுகிறது? புறச் செயல்கள் சம்பந்தப்பட்ட மன அம்சம் எப்படி செயல்படுகிறது?

விபத்துக்கான சாத்தியக் கூறுகளை எடுத்துக் கூறி எச்சரிக்கை மட்டுமே செய்ய வேண்டிய நம் மனது,

"நேற்றைய போன்றே இன்றும் மோதி விடுவோமோ?" என்று பயத்தையும் ஏற்படுத்தி விடுகிறது.

விளைவாக தேவையற்ற பயமும் பதட்டமும் ஏற்பட்டு விடுகிறது.

நாம் ஏற்கனவே மனம், புத்தி, சித்தம் என மனதின் செயல்படும் அமைப்பை பார்த்துள்ளோம்.

ஆலோசனைகளையும் சாத்தியக்கூறுகளையும் எடுத்துக் கூறுவது மனதினுடைய வேலை.

அந்த ஆலோசனைகளில் தேர்வுசெய்து தீர்மானிப்பது புத்தியின் வேலை.

புத்தி எடுத்த முடிவை நிறைவேற்றத் தேவையான உணர்ச்சிகளை வழங்குவது நமது சித்தத்தின் வேலை.

விபத்து ஏற்பட்டு விடும் என நம் புத்தி முடிவெடுத்துவிட்டால்

நமது சித்தம் பயத்தையும் பதட்டத்தையும் வழங்கிவிடும்.

செயல்களைப் பொறுத்த வரையில் புத்தியின் பங்கு தான் பிரதானமானது.

B-1ஐப் பொருத்தவரை புத்தியின் பங்கு தான் பிரதானமானது. புத்தி எடுக்கும் முடிவுக்கு ஏற்ற உணர்ச்சிகள்தாம் வெளிப்படும்.

எதிர்காலம் என்பது இல்லாத ஒன்று. இனிதான் அது ஏற்பட வேண்டும். அங்கு விபத்து ஏற்படலாம், விபத்து இல்லாமலும் இருக்கலாம். இதுதான் நடைமுறை உண்மை.

நமது புத்தி இப்படி ஒரு பொதுவான முடிவு எடுக்குமேயானால் அங்கு இத்தகைய பதற்றமும் பயமும் ஏற்படாது. அதைவிடுத்து விபத்து ஏற்பட்டு விடுமோ என்று நாம் எண்ணுவோமானால் விபத்துக்கான சாத்தியக்கூறு அதிகம் உள்ளதாக முடிவு எடுத்து விடுகிறோம்.

இதனால் பயமும் பதட்டமும் ஏற்பட்டுவிடுகிறது.

விபத்து ஏற்படவும் செய்யலாம் ஏற்படாமலும் இருக்கலாம் என்பது யதார்த்தமானது. நடைமுறை உண்மையோடு தொடர்புடையது. விபத்துக்கான வாய்ப்பு 90% அவருக்கு கிடையாது என்பதுதான் நடைமுறை உண்மை.

ஆனால் விபத்து ஏற்பட்டு விடுமோ என்ற எண்ணும் போது விபத்துக்கான வாய்ப்பு 90% உள்ளது போல் ஆகி விடுகின்றது.

நடைமுறையில் உண்மையற்ற ஒன்றுதான் எதிர்மறைச் சிந்தனையாக இருந்து நம்மை பயமுறுத்துகிறது.

உண்மையை விட பொய்மை தான் இங்க பிரச்சினையாக உள்ளது. இப்போது உண்மையை எதிர்கொள்வதை விட பொய்மையை தான் எதிர்கொள்ள வேண்டியது உள்ளது.

நமது உண்மையான பிரச்சினை என்ன? அது எங்கே என்ன வடிவில் உள்ளது? என்பதை இங்கு நாம் பார்த்துள்ளோம்.

நமது B-1தான் பிரச்சினைக்கு காரணமாக உள்ளது. B-1ல்தான் தீர்வும் தேவைப்படுகிறது

நமது செயல்களை இயக்கும் – நிர்வகிக்கும் மன அம்சம்தான் B-1 ஆகும்.

அங்கு என்ன விதமான தீர்வு தேவைப்படுகிறது?

அதை நமக்குள் நாம் சிந்திப்போமாக.

(தொடர்ச்சி அடுத்த இதழில்.)



# ஸ்ரீ பகவத் குடில்கள்



அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரிய கவுண்டாபுரத்தில் இயற்கை எழில் மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீபகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் நடைபெற்றுவருகிறது.

இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத்தெளிவு பெற்று செல்கின்றனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு எல்லா வசதிகளுடன் கூடிய 32 குடில்கள் (Cottages) கட்ட முடிவு செய்துள்ளோம்.

இந்த கட்டட பணிக்கான பூமி பூஜை நவம்பர் மாதம் 24 ஆம் தேதி ஞாயிறு காலை 11:30 மணி முதல் 12 மணி வரை சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் பலரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

இந்த 32 குடில்களுக்கு (cottages), 32 உறுப்பினர்களை சேர்க்க உள்ளோம். இவர்கள் இந்தக் குடில்களை தங்களது வாழ்நாள் முழுவதும் பயன்படுத்திக் கொள்வதோடு, அவர்களைத் தொடர்ந்து அவர்களது குடும்ப உறுப்பினர்களும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

இந்த வாய்ப்பு, உறுப்பினர்கள் தங்களது விடுமுறை நாட்களிலும் ஓய்வு நாட்களிலும் குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதோடு, ஓர் ஞானியின் அருகாமையில் தங்கிச் அவருடன் உரையாடி ஞானத் தெளிவு பெறுவதற்கும் இயற்கை வளத்தை ரசித்து ஆரோக்கியமாக வாழ்வதற்கும் மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

இதற்கான உறுப்பினர் நன்கொடையாக ரூபாய் 5 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம்.

இந்தக் கட்டடப் பணி 8 மாதத்திற்குள் நிறைவடைந்துவிடும்.

இதில் உறுப்பினராக இணைபவர்கள் தங்களது உறுப்பினர் நன்கொடையை ஆறு தவணைகளாக பிரித்துக் கொடுக்கலாம்.

இதில் உறுப்பினராக இணைவதற்கு ஆர்வமும் வாய்ப்பும் உள்ளவர்கள் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம். இதில் உறுப்பினர்களாக இணைய விருப்பம் உள்ளவர்களுக்கு மேலும் சில தகவல்கள் தெரிவிக்க வேண்டி இருப்பதால் ஆர்வமுள்ளவர்கள் எங்களோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.


அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

**99942 05880, 97891 65555**

V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

## ஞானம் பெற ஆழமான புரிதல் அவசியம் தேவையா?



**கேள்வி :** மனதின் இயக்கத்தைப் பற்றிய சாதாரணமான புரிதல் இருந்தால் மட்டும் போதும். ஓர் ஆழமான ஆழ்மனதில் பதிய வைக்கக்கூடியது போன்ற எந்த ஒரு புரிதலும் அவசியம் இல்லை என்று கூறுகிறீர்கள். எண்ணங்கள் தாமாக வருகின்றன. அவை நம் கட்டுப்பாட்டில் இல்லை என்பதில் எனக்கு எந்த ஐயமுமில்லை. இதை என்னால் எளிதாக ஏற்றுக்கொள்ளவும், புரிந்து கொள்ளவும் முடிகிறது. மனதின் இயக்கத்தைப் புரிந்து கொண்ட பிறகும் கூட எனக்கு ஏன் துன்பம், துயரம் ஏற்படுகிறது? நான் எதிர்பார்த்தபடி நிரந்தரமான எந்த ஒரு மாற்றமும் எனக்கு ஏற்படவில்லை? அது ஏன்?

**பதில் :** மனதின் இயக்கத்தைப் பற்றிய புத்தி பூர்வமான புரிதல் மட்டும் போதும். ஆழ்மனதில் பதிய வைக்க கூடிய புரிதல் என்று எதுவும் தேவையில்லை. ஆனால் நாம் இங்கு எந்த இடத்தில் தவறாக புரிந்து கொள்கிறோம் என்பதைப் கவனிப்போம்.

நம்மிடம் இருக்கும் கருவிகள் இரண்டு. ஒன்று உடல் மற்றொன்று மனம்.

நமது உடலின் செயல்பாடுகளை இரண்டு வகையாக பிரித்துக் கொள்ளலாம். நம்முடைய உதவி இல்லாமல் நம்முடைய கட்டுப்பாடு இல்லாமல் தாமாக செயல்படும் உள் உறுப்புகளின் இயக்கம். இரத்த ஓட்டம், இருதயம், நுரையீரல் போன்றவைகளின் இயக்கம்.

மற்றொன்று வெளிப்புற உலகத்தில் நாம் நம்முடைய அறிவைப் பயன்படுத்தி செய்யும் செயல்கள். காலை எழுந்தது முதல் இரவு வரை நாமாகச் செய்யும் அனைத்து உடல் உறுப்புகளின் செயல்களும் ஆகும்.

இதேபோல் மனதின் செயல்பாட்டையும் இரண்டு வகையாகப் பிரித்துக் கொள்ளலாம்.

நம்முடைய கட்டுப்பாட்டில் இல்லாமல் தாமாக வரும் எண்ணங்கள் மற்றும் உணர்வுகளாகிய பயம், வருத்தம், கோபம், கவலைகள் போன்றவை.

மற்றொன்று வெளிப்புற உலகில் நமக்கு தேவையான செயலை செய்வதற்கு மனதைப் பயன்படுத்தி சிந்தித்து செயல்படுவது ஆகும். இன்பமான வாழ்வியல் முறைக்கான அனைத்து திட்டமிடல்களும்.

இனி மனதின் இயக்கத்தை மட்டும் தனியாக பிரித்து சிந்திப்போம்.

நமது கட்டுப்பாட்டில் இல்லாமல் எண்ணங்கள் உணர்வுகள் தாமாக வருகின்றன என்பதைப் புரிந்து கொண்டோம்.

கோபம், பயம், வருத்தம் போன்ற எந்தவிதமான உணர்வும் ஏற்படுவது நமது கட்டுப்பாட்டில் இல்லை என்பதையும் புரிந்துகொண்டோம்.

இப்பொழுது மீண்டும் உங்களது கேள்வியை கூறுங்கள்.

**கேள்வி :** புரிந்து கொண்ட பிறகும் கூட எனக்கு வருத்தம், கோபம், பயம் அனைத்தும் வழக்கம் போல்தான் ஏற்படுகிறது. என் வாழ்வில் எந்த மாற்றமும் ஏற்படவில்லையே? ஏன்?

**பதில் :** எண்ணங்களும் உணர்வுகளும் நமது கட்டுப்பாட்டில் இல்லாமல் தாமாக வருபவை என்பதுதானே புரிதல்.

இப்பொழுது நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? “நான் தான் புரிந்து கொண்டு விட்டேனே. பிறகு எனக்கு ஏன்? நான் விரும்பியபடி எண்ணங்கள் உணர்வுகள் ஏற்படவில்லை” என்று எண்ணுகிறீர்கள்.

**கேள்வி :** ஆமாம். புரிதலுக்கு முன்பும்கூட எனக்கு இப்படித்தானே இருந்தது.

**பதில் :** புரிதலுக்கு முன்பு எப்படி எண்ணங்களும் உணர்வுகளும் வந்துகொண்டிருந்ததோ, அதேபோல்தான் புரிதலுக்கு பின்பும் எல்லா எண்ணங்களும் உணர்வுகளும் வழக்கம்போல் வந்துகொண்டுதான் இருக்கும் .அதில் எந்த மாற்றமும் இருக்காது.

**கேள்வி :** புரிதலுக்கு முன்னும் புரிதலுக்கு பின்னும் எல்லாவிதமான எண்ண உணர்வுகளும் வழக்கம் போல்தான் வருமென்றால், இந்த புரிதலை புரிந்து கொண்டதனால் எனக்கு என்னதான் பயன்?

**பதில் :** இந்த கேள்வி உங்களுக்கு மட்டுமல்ல இந்த பாதையில் பயணிக்கும் பலருக்கும் இருக்கிறது. இனி இதற்கான பதிலை சிந்திப்போம்.

முதலில் எண்ணங்கள் மற்றும் உணர்வுகள் தாமாக தோன்றி தாமாக மறையக்கூடியவை என்பதை புரிந்து கொண்டோம். “எந்த எண்ணம் வரவேண்டும், எந்த எண்ணம் வரக்கூடாது” என்று தேர்வு செய்யும் எந்த உரிமையும் நமக்கு இல்லை. நமது மன இயக்கம் நமது கட்டுப்பாட்டில் இல்லாத ஒன்று என்பதையும் புரிந்து கொண்டோம்.

கட்டுப்பாட்டில் இல்லாத மன இயக்கத்தை நம் முயற்சியால் கட்டுப்படுத்த நினைப்பது வீண் வேலை என்பதை புரிந்து கொண்டோம். இதனால் மனதை கட்டுப்படுத்த நாமாக செய்யும் முயற்சிகளில் இருந்து விடுபட்டுவிடுகிறோம். மனதை கட்டுப்படுத்தும் முயற்சியை விட்டுவிடுவதால் சிறிது நேரத்திற்கு ஒரு

நிம்மதி, அமைதியான மனநிலை ஏற்படுகிறது. பிறகு நமக்கு இந்த அமைதியான அனுபவம் பிடித்துப்போய் விடுகிறது. .அந்த அனுபவம் நம்மை விட்டுப் போய் விடக்கூடாது என்று மீண்டும் பிடிவாதமாக பற்றிபிடிக்க முயற்சி செய்கின்றோம்.

கேள்வி : அனுபவத்தை பற்றிப் பிடிக்கும் நமது முயற்சிதான் அனைத்து பிரச்சனைகளுக்கும் மூல காரணமா?

பதில் : ஆமாம். மனதில் இருக்கும் ஓர் அனுபவத்தை மாற்ற வேண்டும் என்பதே இன்ப நாட்டம் தான். இன்ப நாட்டம்தான் பிரச்சனை என்று புரிந்துகொண்டு, நமது முயற்சியை கைவிடுவதினால் ஓர் அமைதி அனுபவம் ஏற்படுகிறது. ஏற்பட்ட அமைதி அனுபவம் நமக்கு பிடித்திருக்கிறது. அந்த அமைதி அனுபவம் நம்மை விட்டு போய் விடக்கூடாது என்கின்ற முயற்சி மற்றொரு வகையான இன்ப நாட்டமே.

கேள்வி : அப்படியெனில் இனி நான் என்னதான் செய்வது?

பதில் : மன இயக்கத்தின் செயல்பாட்டினை நம் அறிவு புரிந்து கொண்டதால் மனதை கட்டுப்படுத்தி விடலாம் என்று தப்பு கணக்கிட்டு மீண்டும் நமது புரிதலுக்கு எதிராக மனதை தன்னுடைய கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முடியும் என்று நமது அறிவு முயற்சி செய்ய ஆரம்பித்து விடுகின்றது.

மனதைக் கட்டுப்படுத்தும் முயற்சியினால் போராட்டமும் முரண்பாடும் மட்டுமே மீண்டும் மீண்டும் ஏற்படும்

பலமுறை இப்படி மனதினிடம் நமது அறிவு தோற்றுப்போய் விடுகிறது. நமது அறிவு எப்பொழுது ஒரு முடிவுக்கு வந்து மனதை கட்டுப்படுத்தும் முயற்சியை நிறுத்தி விடுகிறதோ, அப்போது தான் சும்மா இருத்தல் என்பது தாமாக நிகழ்கிறது. மனதை சரி செய்யும் பொறுப்பை நம் அறிவு எடுக்காவிட்டால், எல்லா எண்ணங்களும் உணர்வுகளும் தாமாகவே வந்து வினாடி நேரத்தில் தாமாகவே போய்க்கொண்டிருக்கும்.

இப்படி பிரவாகமாக ஓடும் மன இயக்கத்தையே விடுதலை என்று கூறுகின்றோம்.

கேள்வி : பாதிப்பை ஏற்படும் எண்ண உணர்வுகளால் மனதிலும் உடலிலும் எந்த பாதிப்பும் ஏற்பட்டு விடாதா?

பதில் : ஒரு சிறு ஐஸ்கட்டியை உங்கள் கையில் எடுத்து வைத்தால் எவ்வளவு நேரம் உங்கள் கையில் வைத்திருக்க முடியும்?

இரண்டு மூன்று நிமிடங்களுக்கு மேல் ஐஸ் கட்டியை உங்களால் பிடித்து வைத்துக் கொள்ள முடியாது. துடித்துப் போய் அதை தரையில் வீசி எறிந்து விடுகிறார்கள்.

ஆனால் அதே ஐஸ் கட்டிகளை, ஐஸ் பாக்ஸில் இருந்து வெளியே எடுத்து வைக்கச் சொன்னால், உங்களுக்கு எந்த பெரிய பாதிப்பும் ஏற்படாது. இதை சுலபமாக உங்களால் செய்ய முடியும்.

ஐஸ்கட்டியைப் போல் தான் நமது எண்ண உணர்வுகளும். அது அதிக நேரம் நம்மிடம் நீடித்தால் மிக பெரிய பாதிப்பை ஏற்படுத்தி விடும். எவ்வளவு நேரம் நீடிக்கிறதோ அதற்கேற்றார்போல் பாதிப்பும் அதிகமாகவே இருக்கும். எண்ண உணர்வுகள் குறைந்த நேரம் நீடித்தால் பாதிப்பு மிக மிக குறைவாகவே இருக்கும்.

கேள்வி : இன்னும் எளிமையாக புரிந்து கொள்வதற்கு வேறு ஏதாவது எளிய உதாரணம் உண்டா?

பதில்: நீண்ட நேரம் நீடிக்கும் எண்ண உணர்வுகளை ஒரு தேள்கடி போன்ற பாதிப்பை ஏற்படுத்துவதாக எடுத்து கொள்ளலாம்.

அதேசமயம் குறைந்த நேரம் நீடிக்கும் எண்ண உணர்வுகளை கொசுக்கடி போன்ற பாதிப்பை ஏற்படுத்துவதாக எடுத்துக் கொள்ளலாம்.

கேள்வி : எப்படி நம்மிடம் எண்ண உணர்வுகள் குறைந்த நேரமும் அதிகமான நேரமும் நீடிக்கிறது?

பதில்: நமது புரிதலின்படி எல்லா எண்ண உணர்வுகளும் நமது கட்டுப்பாட்டில் இல்லாமல் தாமாக வந்து தாமாக மறைபவை.

நமக்கு பிடிக்காத உணர்வு ஏற்படும் போது அந்த உணர்வு நம்மிடம் நிரந்தரமாக தங்கி விட்டதாக தவறாக எண்ணிக்கொண்டு அதை அப்புறப்படுத்தும் முயற்சியில் ஈடுபடுகின்றோம்.

அப்புறப்படுத்துதல் என்ற பெயரில் மீண்டும் மீண்டும் நினைவுபடுத்திக் கொண்டு அந்த உணர்வை இழுத்துப் பிடித்து வைத்துக் கொண்டு சண்டை போட்டுக் கொண்டு இருக்கின்றோம்.

தாமாக வந்து போக வேண்டிய எண்ண உணர்வுகளை இப்படி ஏதோ ஒரு வகையில் நாம் பிடித்து வைத்துக்கொண்டு போராடி விடுகின்றோம். அதனால் அந்த உணர்வு நீண்ட நேரம் நம்மிடம் நீடித்து இருக்கிறது. இதனால் உடலிலும் ரசாயன மாற்றம் ஏற்பட்டு பாதிப்பை அடைகிறது .

எந்த கணத்தில் இந்த எண்ண உணர்வுகள் இயற்கையானது என்பதை நமது அறிவு புரிந்து கொண்டு இயற்கையான ஓட்டத்தில் எந்த ஒரு குறுக்கீடும் செய்யாத போது அந்த உணர்வு நம்மிடம் நீடிக்கும் நேரம் மிகவும் குறைவு.

இப்படி புரிந்து கொள்வதால் எண்ண உணர்வுகள் தாமாக தோன்றி தானாகவே மறைந்துவிடும். அதன் பாதிப்பும் மிக குறைவாகவே இருக்கும் .

நமது உணர்வுடன் சண்டை போட்டுக்கொண்டு நமது முழு சக்தியையும் விரயமாக்கி கொண்டிருந்த நாம் இப்பொழுது வெளிப்புற வேலைக்கு நமது சக்தியைப் பயன்படுத்திகொண்டு நமது செயலை சிறப்பாகச் செய்ய தொடங்குகிறோம்.

இப்படி எண்ண உணர்வுகளுடன் போராடாமல் சுதந்திரமாக வாழ்வது தான் ஓர் ஞானியின் அணுகுமுறை ஆகும் ★

# நிகழ்ச்சி நிழல்கள்



நவம்பர் மாதம் நடைபெற்ற ஞான முகாமில் கலந்து கொண்ட அன்பர்களுடன் ஸ்ரீ பகவத் ஐயா





ஸ்ரீ பகவத் புத்தக ஸ்டால் திறப்பு விழாவில்.







ஸ்ரீ பகவத் காட்டேஜ் பூமி பூஜையில்.



ஸ்ரீ பகவத் காட்டேஜ் பூமி பூஜையில்.






ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற்ற தியான முகாமில் கலந்து கொண்ட அன்பர்கள் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்



ஸ்ரீ பகவத் ஐயா
அவர்கள் பேரனுடன்.





ஸ்ரீ பகவத் Cottage கட்டட பணியை பார்வையிட்ட போது.



ஐயாவுடன் வெளிநாட்டு அன்பர்.

# ஸ்ரீ பகவத் ஐயாவின் 3 நாள் ஞான முகாம்

நாள் : 24.1.2020 காலை 11.00 மணிமுதல் 26.1.2020 மதியம் 3.00 மணிவரை
இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம்.

செலவுப் பகிர்வு ரூ. **3000/-** மட்டும்.

செலவுப் பகிர்வு கட்டணத்தை வழங்க இயலாதவர்கள்
தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம்.
நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.

முன்பதிவிற்கு **ஸ்ரீ பகவத் மிஷன்,**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.

**97904118421, 99942 05880, 97891 65555**

அறிவிப்பு : அன்பர்கள் பலரின் வேண்டுகோளுக்கு இணங்க ஆங்கிலத்தில் நடைபெற இருந்த ஞான முகாம் தமிழாக மாற்றப்பட்டுள்ளது.

# ஆசிரியர் பகுதி



**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதை அக்டோபர் மாத இதழில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் கட்டுரை "புரிந்த பிறகும் பிரச்சனையா?" என்ற தலைப்பில் வெளிவந்தது. இந்தக் கட்டுரை பலருக்கும் உள்ள புரிதலைப் பற்றிய சந்தேகங்களை தீர்த்ததோடு புரிதலை உறுதிப்படுத்தி ஞானத்தையும் வழங்கியுள்ளது.

இதனைத் தொடர்ந்து புரிந்த பிறகும் தோன்றும் பிரச்சனைகளுக்கு தீர்வு வழங்கும் விதத்தில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மேலும் சில கோணங்களில் இம்மாத இதழில் இதே தலைப்பில் இதன் இரண்டாவது பகுதியாக ஒரு கட்டுரையை வழங்கியுள்ளார்கள். இதன் அடுத்த பகுதி நிறைவுப் பகுதியாக அடுத்த இதழில் வெளிவரும்.

இந்தக் கட்டுரைகள் அனைத்தும் ஏற்கனவே ஐயாவின் கருத்துக்களை புரிந்து கொண்டவர்களுக்கு ஏற்படும் சந்தேகங்களுக்கு எல்லாம் விடையாக அமையும்.

பிறகு இந்த மூன்று அத்தியாயங்களை இணைத்து சிறு நூலாகவும் வெளியிடலாம் என எண்ணியுள்ளோம்.

சென்ற நவம்பர் மாதத்தில் 9 மற்றும் 10-ம் தேதிகளில் நமது ஸ்ரீபகவத் பவனில் நடைபெற்ற தியான முகாமில் ஸ்ரீபகவத் ஐயா அவர்களால் வடிவமைக்கப்பட்ட அற்புதமான தியானங்களை சென்னை திரு. சந்திரசேகர் அவர்கள் மிகவும் சிறப்பாக கற்றுக் கொடுத்தார்கள்.

இதனைத் தொடர்ந்து 15 ஆம் தேதி முதல் 17-ம் தேதி வரை ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றது. இதிலும் பலரும் கலந்துகொண்டு பயனடைந்தனர்.

மேலும் ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்களுக்கான புத்தக ஸ்டாலின் திறப்பு விழா 24ஆம் தேதி ஞாயிறன்று காலை நடைபெற்றது. இதில் பலரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

இந்த ஸ்டால் சென்னையிலிருந்து சேலம் செல்லும் பைபாஸில் பெரிய கவுண்டாபுரம் வழியாக நமது ஸ்ரீ பகவத் பவனுக்கு திரும்பும் கார்னரில் அமைந்துள்ளது.

இங்கே ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அனைத்து நூல்களோடு ஹீலர் பாஸ்கர் அவர்களின் நூல்களும் கிடைக்கும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

புத்தக ஸ்டாலின் திறப்பு விழாவை தொடர்ந்து நமது ஸ்ரீபகவத் பவனில் 11.30 மணிக்கு ஸ்ரீபகவத் குடில் (Cottage) கட்டட பணிக்கான பூமி பூஜை சிறப்பாக நடந்தது. இதில் பலரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

8 அறைகள் சேர்ந்தது ஒரு கட்டடமாக அமைக்கப்பட உள்ளது. மொத்தம் நான்கு கட்டடம் அமைக்கப்பட உள்ளது. தற்போது முதல் 8 அறைகளுக்கான கட்டடப் பணி விரைவாக நடைபெற்று வருகிறது.

இது இயற்கையான சூழலில் குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதற்கு மிகவும் வசதியாக இருக்கும் வகையில் அமைக்கப்படவுள்ளது.

ஆர்வமும் வாய்ப்பும் உள்ளவர்கள் இதில் பங்கெடுத்துக் கொண்டு பயனடையுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் இம்மாதம் 15ஆம் தேதி ஞாயிறு அன்று சென்னையில் ஒரு நாள் ஞான முகாம் நடைபெற உள்ளது. ஞானத் தேடல் உள்ள புதிய அன்பர்களுக்கு இது மிகவும் பயனுள்ள வகையில் அமையும்.

இத்தகவலை அனைவருக்கும் தெரிவித்து அவர்களையும் பயனடையச் செய்யுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் வாய்ப்புள்ள ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் இந்த முகாம் சிறப்பாக நடைபெற இணைந்து தொண்டாற்ற அழைக்கின்றோம்.

**"யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்".**



# ஜென் கதை

## "மனம் ஒரு சாத்தான்"



இளைஞன் ஒருவன் வெகுநாட்களாக பல அரிய நூல்களைப் படித்து விட்டு ஞானத்தையும் விடுதலையையும் தேடினான். வாழும் ஞானியை சந்திப்பதற்காக பல இன்னல்களையும் இடர்பாடுகளையும் கடந்து புறப்பட்டான்.

ஞானியை பார்க்கவிடாமல் அவனை எப்படியாவது தடுத்து திருப்பி அனுப்பிவிட வேண்டும் என்று சாத்தான் முடிவு செய்தது.

அதனால் ஞானியின் இருப்பிடத்திற்கு அருகாமையில் வர முடியாதபடி பல இடையூறுகளை அவனுக்கு ஏற்படுத்தியது.

அழகிய பெண்ணொருத்தி அவனை அணுகி இன்முகத்துடன் கொஞ்சும் மொழியில் பேசினாள். சரசம் ஆடி தன்னுடன் அவனை அழைத்துச் சென்றாள். சிறிது தூரம் சென்றதுமே சட்டென சுய உணர்வு பெற்றவனாக அவளிடமிருந்து விடுபட்டு ஞானியை காண திரும்பிவிட்டான்.

அவ்வாறு திரும்பும் வழியில் செல்வந்தர் ஒருவர் அவனை கண்டு பேசினார். பொன்னும் பொருளும் அள்ளி தருவதாகக் கூறி தனது மாளிகைக்கு வரும்படி அவனை அன்புடன் அழைத்தார். அதையும் தவிர்த்து ஞானியை நோக்கிச் சென்றான்.

அடுத்ததாக வழியில் வந்த அரசன் அவனுக்கு பதவிகள் தருவதாக கூறி அரண்மனைக்கு அழைத்தான். அதில் இருந்தும் விடுபட்டு ஞானியை நோக்கி செல்லத் துணிந்தான்.

சாத்தான் தன்னிடம் இருந்த அத்தனை விதமான அஸ்திரங்களையும் ஒன்றுவிடாமல் எய்தது.

பொருள், காமம், புகழ், அதிகாரம், அந்தஸ்து என அனைத்தும் அணிவகுத்து நின்று ஒன்றன்பின் ஒன்றாக அவனைத் தாக்க முயன்றன.

எனினும் எதனாலும் அவனது மனோ உறுதியை அசைக்க முடியவில்லை.

பொருள் பற்று, புலன் இன்பம், அதிகாரம் என எல்லா மயக்கங்களுக்கும் ஆட்படாமல் அவற்றை எல்லாம் உதறிவிட்டு இறுதியாக ஞானியிடம் வந்து சேர்ந்தான் அவன்.

தனது அத்தனை ஆயுதங்களும் செயலற்றுப் போய் சாத்தான் ஒரு மூலையில் இருட்டில் சோர்ந்துபோய் ஒடுங்கியது.

ஞானியிடம் வந்துசேர்த்த அந்த இளைஞனுக்கு அதிர்ச்சி. ஞானி நமது பக்கத்து வீட்டு மனிதரை போல் வெகு சாதாரண தோற்றத்துடன் இருக்கிறார். எந்த ஒரு ஒளிவட்டமும் அவரிடம் இல்லை. ஞானியின் பேச்சு மிகவும் எளிமையாக எந்த அலங்காரமும் இல்லாமல் இருந்தது. ஞானியைப் பற்றி இவன் இதுவரை படித்து சேகரித்து வைத்திருந்த கருத்துக்கள் ஒன்று கூட அவருடன் பொருந்தவில்லை. அவனது கருத்துக்கள் அனைத்துக்கும் மாறாகவே இருந்தது. ஓர் ஞானி இப்படித்தான் இருக்கவேண்டும் என்று இவன் வைத்திருந்த இலக்கணம் ஒன்றுகூட அவருக்கு ஒத்துப் போகவில்லை.

ஞானி இவன் வந்ததை கூட கவனிக்கவில்லை. அங்கிருந்த எவரும் இவனை பொருட்படுத்தவில்லை.

சற்று நேரம் மௌனமாக அங்கே நடப்பவற்றை கவனித்தான். ஞானியின் பேச்சில் உயர்ந்த தத்துவங்களோ கோட்பாடுகளோ எதுவும் இளைஞனுக்கு தென்படவில்லை

"ஒரு படிப்பறிவற்ற கிராமவாசி கூட இவரை விட சிறப்பாகவே பேசுவான், ஞானியின் தோற்றம், உடை, பேச்சு, செயல்பாடுகள் என்று எதிலுமே ஒரு சராசரி மேதைக்குரிய இலக்கணங்கள் கூட இவரிடம் இல்லையே! இவரை எப்படி எல்லோரும் ஞானி என்று கூறுகிறார்கள்?" என்று எண்ணினான். அவரைக் காட்டிலும் தான் அறிவுக்கூர்மையாக சிறந்தவனாக இருப்பதாக எண்ணிக் கொண்டான்.

அவனுக்கும் மெல்லிய ஏளனப் புன்னகை எழுந்தது.

"மக்கள் மடையர்கள் யாரையாவது தொழுது வணங்க வேண்டும். எந்தப் பரதேசியையாவது பிடித்து தொங்குவார்கள் எல்லா காலங்களிலும்" என்று முணுமுணுத்தவாரு ஒன்றுமே சொல்லாமல் மௌனமாக வந்தவழியே வெளியேறினான்.

அவன் வெளியேறியதும் ஞானி அந்த இடத்தின் மூலையில் உற்றுப் பார்த்தார். "நீ இவ்வளவு சிரமப்பட்டு இருக்க வேண்டியதே இல்லை. அவன் தொடக்கத்திலிருந்தே உன்னுடைய ஆள்தான்" என்றார் அங்கே அமர்ந்திருந்த சாத்தானிடம் சிரித்தபடியே.

இந்தக் கதையிலிருந்து நாம் விளங்கிக் கொள்ளும் கருத்து: பொருள் பற்று, புலன் இன்பம் என்னும் புறச் சாத்தானிடம் இருந்து கூட ஒருவன் விடுபட்டுவிட்டாலும் அவனுடைய மனோ சாத்தானிடம் இருந்து விடுபட்டால் மட்டும்தான் உண்மையான ஞானமும் அதனால் விடுதலையும் சித்திக்கும்.

நம்மில் பலர் இந்தப் புற விஷயங்களில் இருந்தெல்லாம் கூட தப்பித்து விடுகிறோம். ஆனால் இந்த மனோசாத்தானிடம் இருந்து தப்பிப்பதற்கு எந்த வழியும் தெரியாமல் தத்தளிக்கின்றோம். மனோ சாத்தானிடம் இருந்து தப்பிப்பதற்கு ஒரே ஒரு வழி உண்டு. அது தான் பகவத் ஐயா காட்டும் மனதைப் பற்றிய ஞான புரிதலை திறந்த மனதுடன் அணுகுவதே ஒன்றே வழி.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555